திருவாரூர்த் தமிழ்ச்சங்கப் பிரசுரம், நெ-3]

உ

சாத்தந்தையார் மகனார்

கண்ணன் சேந்தனார்

அருளிச்செய்த

# திணைமொழி ஐம்பது.

மூலமும் பழைய உரையும்.

---

இஃது

இலக்கணவிளக்க பரம்பரை,

சோமசுந்தரதேசிகரால்

பரிசோதிக்கப்பட்டு,

---

திருவாரூர்த் தமிழ்ச் சங்கத்தாரால்

வெளியிடப்பட்டது.

---

திருவாரூர்.

விக்டோரியா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை அணா 2.] 1918.

உ

# முகவுரை

திணைமொழி ஐம்பது என்னும் இச்சிறிய நூல் பொருளினுஞ் சுவையினும் மிக மலிந்ததென்று ஆன்றோராற் பலவிடத்தும் பாராட்டப்பட்டதாயினும், தமிழகத்தில் இதுகாறும் புத்தகரூபமாக வெளிவராதிருந்தது. அக்குறையை நீக்கவேண்டும் என்னும் பேராசையால், இலக்கணவிளக்க பரம்பரை சோமசுந்தர தேசிகர் அவர்களது கிரகத்தில் பெரியோர்களால் சேமித்து வைக்கப்பட்டிருந்த ஏட்டுப் புத்தகம் ஒன்றை ஆதாரமாகக் கொண்டும், சென்னை இராஜாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலையிலிருந்த பிரதியின் நகல் ஒன்றை வருவித்தும், மணக்கால் ஸ்ரீமான் முத்துரத்தின முதலியார் அவர்கள் உதவிய பிரதி கொண்டும் ஆராய்ச்சி செய்து இப்புத்தகம் வெளியிடலானோம்.

இதனை வெளியிடுவதற்குப் பொருளுதவி செய்த சங்க போஷகர்களுள் ஒருவராகிய காவாலகுடி ஸ்ரீமான் தி. சோமசுந்தர முதலியார் அவர்களது தமிழபிமானமும் பேருபகாரமும் மிகவும் போற்றற்பாலது.

காரியதரிசிகள்.

## நூன்முகம்.

நாலடிநான் மணியென்ன நச்சவரும் வெண்பாவின்
மேலடியி னுலைந்து திணையென்ன மேவியநூற்
பாலடியிற் றிணைமொழியைம் பதுவாகும் பண்பினதைக்
காலடியில் யான்பணியும் கண்ணானு ரிசைத்தனரால். (க)

முருக்கைநே ரிதழ்மடவார் முயக்கவின் பத்துரையி
னிருக்கைமொழி யிந்நூலை யியைந்தபடி யெடுத்தெழுதித்
திருக்கையுறு வித்தகச்சிற் றிருத்தமுறப் பதித்தருளு
முருக்கையார் யாவரெனி னுரைக்குவலிவ் வவனிக்கே. (உ)

பூண்டமணி தொடைபுனைந்து புனைந்ததனை வழிபடுவார்
மாண்டதவப் பயனுணர்ந்து மாமறைநூ லந்தத்து
நீண்டபத முறவளிப்பா னிகரிலாத திருவாரூ
ராண்டகவி யரசாகி யைந்திலக்க ணத்தொகுதி. (ங)

கற்றுநவில் புகழ்முனிவன் கருணைவைத் தியநாதன்
பற்றுமிகு குலத்துதித்துப் பல்லுலகும் புகழ்பெற்றோன்
சற்றுமொரு தளர்ச்சியிலா தெனைநண்ப னுக்கொண்டோன்
சொற்றுதிகொள் சோமசுந் தரநாமத் தூயவனே. (ச)

ப. அ. முத்துத்தாண்டவராயன்.

## சிறப்புப்பாயிரம்.

### விருத்தம்.

செந்தமிழிற் பதினெண்கீழ்க் கணக்கதனு
ளொன்றாகித் திகழ்கின்ற
ஐந்திணைசேர் மொழியைம்ப துரையுடனே
பரிசோதித் தச்சிட்டான்
அந்தவிலக் கணவிளக்க வாசிரியன்
பரம்பரைசே ரறிஞன்சோம
சுந்தரதே சிகன்கமலைப் பதிவாசன்
தமிழ்ஞானந் துலங்கமாதோ.

அ. குமரசாமிப் பிள்ளை.
சுன்னாகம்.

உ

கடவுள் துணை

சாத்தந்தையார் மகனார்

# கண்ணன் சேந்தனார்

இயற்றிய

# திணைமொழி ஐம்பது

## மூலமும் உரையும்.

### குறிஞ்சி.

1. ........................................
........................................
........................................
........................................

* அந்தி அச்சுறுத்துவது.

...............அண்டர்துசன் பொர்கின்ற வானளவு முயர்ந்த வெற்பனே! இரவின்கண்............வருகின்ற சுரங்களாதலான், எ-று. (க)

2. கணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை யெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட வரவரிதாங் கொல்லோ
புனமு மடங்கின காப்பு. ‡

செறிப்பறி வுறீஇ வரைவு கடாயது.

(இ-ள்) திரட்சியையுடைய மொட்டுக்களைக் கையென்று கருதும்படி காந்தள் களழகுபெற அரும்ப, அதன் மணத்தையுடைய முகைகளென்று கருதி மந்திகள் கொண்டாடுகின்ற மிகுதியையுடைய மலைநாடனே! நீ இங்கு வருதலரிதாங் கொல்லோ? புனங்களுந் தினைபறிக்கப்பட்டுக் காவலொழிந்தன—எ-று. (உ)

---

* குறிப்பு—கிடைத்த இரண்டு பிரதிகளுள்ளும் "எல்லைகாக்கின்றவருடைய பாணி" என்று எழுதப்பட்டிருக்கிறது.

‡ இதனை, நச்சினார்க்கினியர் தினை விளைந்தமை கூறிச்செறிப்பறி வுறீஇயதற்கு உதாரணங்காட்டுவர். (தொல்—களவியல். சூ, 114.)

3. ஓங்க லிறுவரைமேற் காந்தள் கடிகவினைப்
பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போல
வீங்கு நெகிழ்ந்த வளை. †

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

(இ-ள்) மலையினது பக்கமலைமேற் காந்தள் புதிதாக வழகுபெறுதலாலவற்றின் முகைகளைப் பாம்பென்று கருதிச்சென்றுருமு விடித்தலானவற்றைப் பிறர்கண்டிரங்குகின்ற பூங்குன்றநாடன் புணர்ந்த வந்நாள்போலவாயிக் காலத்து நெகிழ்ந்து கழன்றனவென்வளைகள். எ-று. (௩)

4. ஏன விடந்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொ லென்றோழி
மேனி பசப்புக் கெட. *

தலைமகனைத்தோழி இரவுக்குறி நயப்பித்தது.

(இ-ள்) ஏனவிடந்திட்ட குளிர்ந்தமணிகளைக் கொண்டிரவின்கட் குறவர் மக்கள் தங்குளிர் நீங்கக்காயும்.........வெற்பனிங்கு வருவான் கொலோ? என்னுடைய தோழி மேனியிற் பசப்புக்கெட. எ-று. (௪)

5. விரைகமழ் சாரல் விளைபுனங் காப்பார்
வரையிடை வாரன்மி னைய—வுரைகடியர்
வில்லினர் வேலர் விரைசெல் லம்பினர்
கல்லிடை வாழ்ந ரெமர்.

பின்னின்ற தலைமகனைக் காவன்மிகுதி சொல்லிச் சேட்படுத்தது.

(இ-ள்) விரைகமழாநின்ற சாரலின்கண் விளைபுனங்காப்பார்கள். இம்மலையின் கண் வரவேண்டா ஐயனே! கடுஞ்சொல்லினர், விரைந்து செல்லுமம்பினர், மலையின் வாழ்வாராகிய வெமர். எ-று. (௫)

---

† இதனை, நச்சினார்க்கினியர் இரவுக்குறி நயந்துகூறியது என்பதற்கு உதாரணங்காட்டுவர். (தொல்—களவியல், சூ 111.)

* இதனை, தலைவன் வருவானென்றதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல்—களவியல், சூ. 114)

6. யானை யுழலு மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம்
ஏனலு ளைய வருதன்மற் றென்னைகொல்
காணினுங் காய்வ ரெமர். ‡

இதுவுமது.

(இ-ள்) யானைகளுழன்று திரியுமழகுமிக்க நீள்வரைக்கானத்து வாழும்வாழ்க்கையினையுடைய குறவின்கண் நீ ரொழுவதாலென்ன பயனுளது? நம்மைக் காணினும் நீர்வந்தீரென்று கேட்பினு நம்மை வெகுள்வரெமர், எ-று. (௬)

7. யாழுங் குழலு முழவு மியைந்தென
வீழு மருவி விறன்மலை நன்னாட
மாழைமா னோக்கியு மாற்றா ளிராவரி
னாரறி கௌவை தரும்.

இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.

(இ-ள்) யாழுங் குழலு முழவுந் தம்முடன் பொருந்தி யொலித்தாற் போல வீழாநின்ற வருவியையுடைய மிக்க..........மான்போன்ற நோக்கினையுடையாளு மாற்றமாட்டாள். நீஇரவின்கண் வருதியாயினூராரும் பிறருமலரைத்தரு மென்றவாறு. (௭)

8. வேங்கை ம[illegible] வெறிகமழ் சாரற்கண்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்த குருதி யொழுகமற் றிப்புனத்தே
போந்ததி லைய களிறு.

..................................படை †

(இ-ள்) வேங்கை மலர்தலான் வெறி கமழாநின்ற தண்சிலம்பின்கண்ணே வளைந்த மூங்கில் போன்ற மெல்லிய தோளையுடைய குறவர் மகளிரேம் யாங்கள். குருதிபாய்ந்தொழுக விவ்விடத்தின்கண் போந்ததில்லை யையனே களிறு. எ-று. (௮)

---

‡ இதனை, அஞ்சி அச்சுறுத்தலின் கீழ் தமரையஞ்சிக்கூறியது என்பதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல்—களவியல், சூ. 114)

† துறை விளங்கவில்லை. இதனை, தலைவனைப்பேதைமை யூட்டினது என்பதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல்களவியல், சூ 114)

9. பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
மணிமலை நாடன் வருவான்கொ றோழி
கணிநிறை வேங்கை மலர்ந்துவண் டார்க்கு
மணிநிற மாலைப் பொழுது. ‡

தோழிதலைமகளை இரவுக்குறி நயப்பித்தது.

(இ-ள்) நோயான் வந்த நிறந்தீர்ந்து பெரும்பணைத்தோள் பருப்ப வண் மலைநாடன் வருவான் கொல்லோ, தோழி, கணியைப்போல நாட்சொல்லு நிறை வேங்கை மலர்ந்து வண்டுகள் ஒலியாநின்ற நீலமணிபோன்ற நிறத் தினையுடைய மாலைப்பொழுதின்கண்? எ-று. (௯)

10. பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்
நிலிவென் றிணைபயிருங் கல்சூழ் வெற்பன்
புலவுங்கொ றோழி புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து. *

இது தலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்துமொழி
கிளவியால் தோழிவரைவு கடாயது.

(இ-ள்) பலாப்பழத்தினைப் பெற்றுப் பசுங்கண்ணினையுடைய குரங்கினுட் கடுவ னேடி யென்று தனக்கிணையாகிய மந்தியையழைக்கும் பெற்றிய கற்கள்சூழ்ந்த வெற்பன் நம்மை யூடுங்கொல்லோ, தோழி? நங்காதலரோடு புணர்ந்த புணர்ச்சியையறிந்து புனத்துச்செல்லும் செலவினையுந் தவிர்ந் தாள் அன்னையாதலால். எ று. (௰)

பாலை.

11. கழுநீர் மலர்க்கண்ணாய் கௌவையோ லிற்கப்
பொருணீர்மை நினைத்துப் பொய்த்தார் நங்காதல
ரழிநிற்க வாகி யாற்றெழுந்து தோன்றி
வழிநீ ரறுத்த சுரம். †

---

‡ இதனை, இத்துறைக்கே உதாரணங்காட்டுவர் ந—ர்., (தொல்-களவியல், சூ. 111.)

* இதனை, மனைப்பட்டுக்கலங்கிச் சிதைந்தவழி தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தல் என்பதற்கு உதாரணங்காட்டுவர் ந-ர். [தொல்-களவியல், சூ. 111.]

தலைமகனது செலவுணர்ந்து வேண்டாத மனத்தளாய்த் தோழிக்குத், தலைமகள் சொல்லியது.

(இ-ள்) செங்கழுநீர் போன்ற கண்ணினையுடையாய்! அலர் பிரிந்ததால் நிகழும் அலர் நிற்கப் பொருண்மேல் நீர்மையை யுடையராய் நங்காதலர் முன்சொல்லிய சொல்லைப்பொய்த்து நம்மைநீங்குவார் போனர்; அங்குள்ளார் அழியு நீர்மையவாகிப் பச்சையுறுதல் தனக்குத்தோன்றிப் போய வழியின்கண் நீரறுத்த சுரங்களின் கண்ணே, எ-று. (க)

12. முரிபால வாகி முரணழிந்து தோன்றி
வெரிபரந்த கான மியைபொருட்குப் போவீ
ரரிபரந்த வுண்கண்ணு ளாற்றுமை நும்மிற்
றெரிவர்யார் தேரு மிடத்து.

யான் பிரியத் தலைமகளாற்றுமோ நீ யறிவாயாகேன்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(இ-ள்) முரிபறந்த பருக்கையினையுடையவாய் வலியழிந்து தோன்றி யெரிபரந்த கானத்தின்கண் இயற்றும் பொருட் பொருட்டுச் செல்வீர் அரிபரந்த வுண்கண்ணுள் ஆற்றுளென்னும் திறத்தை நும்மைப்போல் பிறரறிகிற்பார் யார் ஆராயுமிடத்து, எ-று. (உ)

13. ஓங்கு குருந்தோ டரும்பீன்று பாங்கர்
மாஅ மலர்ந்தன தோன்றி விராஅய்க்
கலந்தனர் சென்றார் வலந்தசொ லெல்லாம்
பொலந்தொடீஇ பொய்த்த குயில்.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச்சொல்லியது.

(இ-ள்) ஓங்கிய குருந்தோடே கூட வரும்புகளையீன்று பாங்காாகிய மாஅ மாமும் விளங்கி மலர்ந்தன; புணர்ந்து விரவிக்கலந்து சென்ற நங்காதலர் வலந்த சொல்லெல்லாம் பழுதாக்கின குயில்கள், பொலந்தொடீ! எ-று. (ங)

14. புன்னைப் பொறிமலரும் பூம்பொழி லெல்லாஞ்
செங்கட் குயிலக வும்பொழுது கண்டும்
பொருணசை யுள்ளத் துரந்தார் தோழீ
வருநசை பார்க்குமென் னெஞ்சு.

---

† நம்பி அகப்பொருள்---சூ. 170. தஞ்சைவாணன்---கோவை 264 நோக்குக.

இதுவுமது.

(இ-ள்) புன்னைகள் பொரிபோல மலரப் பூந்தண் பொழில்களெல்லாஞ் செங்கட் குயில்கள் கூவுகின்ற பொழுது கண்டும் முன்பு பொருணசையை யுடைய ஊக்கந் துரப்ப நம்மை நீக்கினர்; வருநசையைப் பாராநின்ற தென்னெஞ்சு, எ-று. (௪)

15. சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறு
நெறியரு நீள்சுரத் தல்குவர்கொ றோழீ
முறியெழின் மேனி பசப்பவரு ளொழிந்தார்
பொருள்வேட்ட வேட்கை யவர்.

ஆற்றானெனக் கவன்ற தோழிக் காற்றுவலென்பதுபடச் சொல்லியது.

(இ-ள்) சிறியபுல்லிய புறவினோடு சிறிய புல்லூறு வெகுளும் வழியரிய நீள் சுரத்தின்கட் டங்குவர் கொல்லோ, தோழீ! தளிரினதழகு போன்றிருந்த வென்மேனி பசப்ப நம் மேலுள்ள அருளினை யொழிந்து சிறந்த பொருளினை வேட்ட வேட்கையை யுடையவர், எ-று. (௫)

16. கருங்கான் மராஅ நுணவோ டலர
விருஞ்சிறை வண்டினம் பாலை முரல
விரும்பிய முள்ளெயிற் றஞ்சொன் மடவாய்
விரும்புநாம் செல்லு மிடம்.

புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளை யாற்றுவித்துக் கொண்டு சொல்லியது.

(இ-ள்) கருங்காலினை யுடைய மராமரங்கள் நுணவொடு மலர விருஞ்சிறை வண்டினங்கள் பாலையென்னும் பண்ணைமுரல விரும்பிய முள்ளெயிற் றினையு மழகிய சொல்லினையுமுடைய மடவாய்! நாம் செல்லும் வழியை விரும்புவாய், எ-று. (௬)

17. கல்லதர் வாயிற் கடுந்துடிகள் பம்பும்
வில்லுழுது வாழ்நர் குறும்புள்ளும் போவர்கொ
லெல்வளை மென்றோ ணெகிழப் பொருணசைஇ
நல்கா துறந்த நமர்.

ஆற்றாளென்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச்சொல்லியது.

(இ-ள்) கல்லையுடைய வழிமருங்கினுள்ள குறும்புகளின் வயிறெரு மச்சத்தைச் செய்யுந் துடிகளின் றியம்பும் வில்லுழுது வாழ்வார் குறும்பின் கண்ணுஞ் செல்வர் கொல்லோ? விளங்கும் வளைமென்றோள் மெலியும்படி பொருள்காதலா னம்மை நல்காது நீங்கிய நமர், எ-று. (எ)

18. கதிர்சுடக் கண்ணுடைந்து முத்தஞ் சொரியும்
வெதிர்பிணங்குஞ் சோலை வியன்கானஞ் செல்வார்க்
கெதிர்வன போலிதே மெல்வளையோ கொன்னே
யுதிர்வன போல வுள.

செலவுக் குறிப்பறிந்த தலைமகள் ஞடன்படாது சொல்லியது.

(இ-ள்) வெயில் சுடுதலாற் கண்பிளந்து முத்தங்களைச் சொரியாநின்ற வேய் பிணங்குஞ் சோலையையுடைய வகன்ற கானகத்துஞ் செல்லக்கருதி னார்க்குடன்படுவன போன்றிருந்தன வில்லை; என்னிலங்கு வளையோ வென்னே நிலத்தின்கட் சிந்துவன போன்றன. எ-று. (அ)

19. கலையொடு மானிரங்கு கல்லத ரத்த
நிலையஞ்சி நீள்சுரத் தல்குவர்கொ றோழி
முலையொடு சோர்கின்ற பொன்வண்ணா மன்றோ
வளையொடு சோருமென் றோள்.

ஆற்றாளென்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச் சொல்லியது.

(இ-ள்) கலையொடுமான்கள் துன்புற்றிரங்கா நிற்கும் மலைவழிகளையுடைய களிறுகளிப்பெற்றி.........யச்சுரத்தின் கட்டங்குவர் கொல்லோ? தோழி! முலையொடு சோர்கின்றன போன்ற வண்ணங்கள் அந்தோ! வளையுடனே தளர்ந்து சோர்கின்ற வென்றோள்கள், எ-று. (கூ)

20. எற்றிய வில்லி னெயினர்க் கடுஞ்சுரம்
பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்
கூற்றன வல்வில் விடலையோ டென்மக
ளாற்றுங்கொ லைய நடந்து.

மகட் போக்கிய நற்றாய் சொல்லியது.

(இ-ள்) நாணேற்றிய வில்லினையுடைய வேடர் வாழும் கடுஞ்சுரத்தின் கட் பாற்றினஞ்சேரப் படுகின்ற நிழலைக் கண்டஞ்சி என்மகள் கூற்றன்ன வல்

வில்லையுடைய விடலையுடனே சென்றுற்ற வல்லள் கொல்லோ மெல்லியதாக நடந்து; எ-று. (ய)

## முல்லை.

21. அஞ்சனக் காயா மலரக் குருகிலை
யொண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோட றுடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் றோள்.

தலைமகன் வரைவு மலிந்தது தோழி தலைமகட்குச் சொல்லியது.

(இ-ள்) அஞ்சனம் போலக் காயாக்கண் மலரக், குருகிலைகள் ஒண்டொடியுடைய நல்லார் முறுவல்போல வழகுகொள்ளக் குளிர்ந்த, கோடல்கள் துடுப்புப்போலப் பூங்குலையை யீனுநிற்ப, நங்காதலர்வந்தார்; நின்னுடைய தோள்கள் விளங்குவவாக, எ-று. (க)

22. மென்முலைமே லூர்ந்த பசலைமற் றென்னுங்கொ
னன்னுதன் மாதரா யேதோ நமர்வருவர்
பன்னிற முல்லை யரும்பப் பருவஞ்செய்
தின்னிறங் கொண்டதிக் கார்.

தோழி பருவங்காட்டித்தலைமகளை வற்புறுத்தியது.

(இ-ள்) நின்னுடைய மெல்லிய முலைமேலேறிய பசலைநிற மென்னுங் கொல்லோ! நன்னுதன் மாதராய் நமர் வருவர் பல்போன்றிருந்த நிறத்தையுடைய முல்லைகள் தாம் பருவத்தைச்செய்து கண்டார்க்கினிய நிறத்தைக் கொண்டதிக்கார், எ-று. (உ)

23. சென்றார் வருவர் செறிதொடீஇக் காரிஃதோ
வெஞ்சின வேந்தர் முரசினிடித் தூறித்
தண்கட னீத்தம் பருகித் தலைசிறந்
தின்றையி னாளை மிகும்.

இதுவுமது.

(இ-ள்) நம்மைப பிரிந்து போயினார் வருவார். செறிதொடீஇ! காலம் கார்காலமாயிருந்தது. வெஞ்சின வேந்தர் முரசுபோலிடித்து முழங்கித்தண் கடல் வெள்ளத்தைப் பருகி மேன்மேற் சிறந்து இன்றையினாளை மிகுங் காண், எ-று. (ங)

24. செஞ்சுணங்கின் மென்முலையாய் சேர்பசலை தீர்ப்பதோ
வஞ்சினஞ் சொல்லி வலித்தார் வருகுறியால்
வெஞ்சினம் பொங்கி யிடித்துரறிக் கார்வானந்
தண்பெயல் கான்ற புறவு.

இதுவுமது.

(இ-ள்) செஞ்சுணங்கினையுடைய மெல்லிய முலையாய்! நின்னைச்சேர்ந்த பசலை நீங்குவதாகச் சூளுறவாகிய சொற்களைச் சொல்லி நம்மை வற்புறுத்தினார். தாம் வருவதாகச் சொல்லிய குறியால், வெஞ்சினத்தாற் பொங்கியது போல விடித்து முழங்கிக் கருத்தமுகில்கள் தண்பெயலைப் புறவின்கண்ணே யுகுத்தனவாதலால், காரிது—எ-று. (௪)

25. கருவிய கார்மழை கால்கலந் தேந்த
வுருகு மடமான் பிணையோ டுகளு
முருவ முலையாய்நங் காதல ரின்னே
வருவர் வலிக்கும் பொழுது.

இதுவுமது.

(இ-ள்) கருவியன்ற கரியமழை காற்றொடு கலந்துயர்தலால், முன் வெம்மையாலுருகும் மடமான்கள் தம்பிணையொ டுகளாநின்றன. நிறத்தை யுடைய முலையாய்! நங்காதலரிப் பொழுதே வருவர். இக்காலம் நம்மைத் தேற்றுவியாநின்றது—எ-று. (௫)

26. இருங்கடன் மாந்திய வேர்கொ ளெழிலி
கருங்கொடி முல்லை கவின முழங்கிப்
பெரும்பெய ருழப் பெயர்குறி செய்தார்
பொருந்த நமக்குறைத்த போழ்து.

இதுவுமது.

(இ-ள்) பெருங்கடலைப்பருகிய அழகுகொண்ட முகில் கருங்கொடி முல்லை களழகுபெறும்படி முழங்கிப் பெரும்பெயல்விழாநிற்கப் பெயர்ந்து வருவமென்று காதலர் குறிசெய்தாராகலால், நமக்குப்பொருந்த அவருரைத்த காலமிது—எ-று. (௬

27. ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைகரப்
பாய முழங்கிப் படுகட லுணீர்முகந்து
மாயிரு ஞால மிருள்கூர் மருண்மாலை
சேயவர் செய்த குறி.

இதுவுமது.

(இ-ள்) ஆயர்களினத்தை யூரின்கண்ணே பெயர்வித்து ஆம்பல் குழலை மறுவ, ஒலிக்குங்கடலுள் நீரைமுகந்து பரக்க முழங்குதலான் மாயிரு ஞால மெல்லாம் இருள் மிக்கு மயங்கு மாலைப்பொழுது நம்மைப்பிரிந்து சேய ராயினர் வருவதற்குச் சொல்லிய குறி—எ-று. (எ)

28. அதிர்குர லேறோ டலைகடன் மாந்தி
முதிர்மணி நாக மனுங்க முழங்கிக்
கதிர்மறை மாலை கலிபெய லுழப்
பிதிரு முலைமேற் சுணங்கு.

பருவங்காட்டிய தோழி வற்புறுத்தியது.

(இ-ள்) அலைகடலைப்பருகி யதிராநின்ற குரலினையுடைய வருமேற்றோடு முதிர்ந்தமணி நாகங்கள் வருந்தும் வகை முழங்கி வெயின்மறைந்த மாலைப் பொழுது மிக்க பெயலுழ்தலான், இவண்முலைமேற் சுணங்குகள் பிரிந் தாற்போல நிறக்கும்—எ-று. (அ)

29. கோடலங் கூர்முகை கோளரா நேர்கருதக்
காடெலாங் கார்செய்து முல்லை யரும்பீன
வாரெலா நுண்ணறல் வார வணியிழாய்
போதராய் காண்பாம் புறவு.

இதுவுமது.

(இ-ள்) காந்தளின் மிக்கவரும்புகள் கோளராவிற்கு மாறாகக்கருதிக் காடெல் லாங் கார்ப் பருவத்தைச் செய்து முல்லை யரும்புகளை யீன, வழிகளெல்லாம் நுண்ணிய வறன்மணல் மேலெழுதலால், அணியிழையை யுடையாய், புற வினைக்காண்பாம் போதராய்—எ-று. (கூ)

30. அருவி யதிரக் குருகிலை பூப்பத்
தெரியா வினநிறை தீம்பால் பிலிற்ற
வரிவளைத் தோளி வருவார் நமர்கொல்
பெரிய மலர்ந்ததிக் கார்.

இதுவுமது.

(இ-ள்) மலையருவிகள் வந்து முழங்க, குருகிலைகள் பூப்பத், தெரிந்த வானினங்கள் இனியபாலைப் பொழிய, வரிவளைத் தோளினை யுடையாய், நமர் வருவார் கொல்லோ, பெரிய வாயுள்ள வழகுகளை மலர்ந்ததிக்கார், எ-று. (ய)

## மருதம்.

31. பழனம் படிந்த படுகோட் டெருமை
கழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட்
டுரனழிந் தோடு மொலிபுன லூரன்
கிழமை யுடையனென் றோட்கு.

தலைமகள் வாயின் மறுத்தது.

(இ-ள்) பழனத்தின்கட் படிந்த படுகோட்டினையுடைய வெருமை கழனியின்கட் டொழில் செய்வார்க் கெறிந்தபறையொலியைக்கேட்டு வெருவி யறிவழிந்தோடு மொலி புனலை யுடைய வூரன் என்றோட் குரிமையுடையனென்னும் இத்துணையே யமையும்; அவனெனக்கு நல்குதல் வேண்டுவதில்லை. எ-று. (க)

32. கணைக்கா னெடுமருது் கான்ற நறுந்தா
திணைக்கா னீலத் திதழ்மேற் சொரியும்
பணைத்தாட் கதிர்ச்செந்நெற் பாய்வய லூர
னினைத்தா னெமக்குமோர் நோய்.

இதுவுமது.

(இ-ள்) திரண்ட காலையுடைய மருதுகளுகுத்த நறுந்தாதுகளொத்த தாளினையுடைய நீலங்களி னிதழ்மேலே சொரியும் பெருந்தாட் கதிரை யுடைய செந்நெற் பரந்த வயலூரான் பரத்தையற் கின்பத்தை யிழைத்தலே யன்றி யெமக்கு மோர் பசலை நோயிழைத்தான், எ-று. (உ

33. கடையாயார் நட்பேபோற் காஞ்சிநல் லூர
வுடைய விளநல முண்டாய் - கடையக்
கதிர்முலை யாகத்துக் கண்ணனார் சேரி
யெதிர்நல மேன்றுநின் றாய்.

**தோழி வாயின் மறுத்தது.**

(இ-ள்) கீழாயினார் நட்பே போலக் காஞ்சி மரங்களையுடைய நல்லூரனே! ன்றோழியுடைய் விளநலமெல்லா முன்பு நுகர்ந்தாய்; பின்னை யக்கதிர் முலையார்கத்துக் கண்ணனையார் சேரிக்கட் சென்று மற்றவரிளமை எதிர் நலத்தை யெதிர் நேர நின்றாய், எ-று. (௩)

34. செந்நெல் விளைவய லூரன் சிலபகற்
றன்னலமென்னலார்க் கீயா னெழுபாண
பாரித்த வல்குற் பணைத்தோளார் சேரியுள்
வாரிக்குப் புக்குநின் றார்.

**தலைமகள் பாணற்கு வாயின் மறுத்தது.**

(இ-ள்) செந்நெல் விளைகின்ற வயலினையுடைய வூரன் முன்பு சில நாட் டன்னலத்தை யானல்லாதார்க் கீயான்; இப்பொழுது பாரித்த வல்குற் பணைத்தோளையுடைய பரத்தையர் சேரியின்கண் மற்றவர் தலைமகற்கே நல்கும் வாரிக்கு புக்கு நின்றார்; பாண! இங்கு நின்று மெழுவாயாக!எ-று (௪)

35. வேனிற் பருவத் தெதிர்மலரேற் றாதுங்
கூனிவண் டன்ன குளிர்வய நல்லூரன்
மாணிழை நல்லா ரிளநல முண்டவர்
மேனி யொழிய விடும்.

**இதுவுமது.**

(இ-ள்) வேனிற்காலத் தெதிர்ந்த மலர்களை யேற்றுக்கொண்டூதும் கூனி வண்டு போலுங் குளிர்வய னல்லூர னுகலான் மாட்சிமைப்பட்ட இளமை யுடைய நல்லாரின் நலத்தை நுகர்ந்து மற்றவ ருடம்பினை யொழிய விடும், எ-று. (௫)

36. செந்தா மரைமலருஞ் செய்வய லூர
நொந்தான் மற்றுன்னைச் செயப்படுவ தென்னுண்டாந்
தந்தாயு நீயே தரவந்த நன்னலங்
கொண்டாயு நீயாயக் கால்

தோழி வாயின் நேர்வோள் கூறியது.

(இ-ள்) செந்தாமரைகள் மலராநின்ற செய்யப்பட்ட வயல்களையுடைய நல்லூர! நீ செய்த பிழைகட்கு நொந்தால் நின்னைச் செய்யப்படுவ தென்னுள்ளதாம்? என்றோள் நலத்தை தந்தாயு நீயே; தரவந்த நன்னலத்தைக் கொண்டாயு நீயேயாயினால், எ-று.

37. பல்காலும் வந்து பயின்றுரையல் பாணகே
ணெல்சேர் விளைவய லூரன் புணர்ந்தநா
ளெல்வளைய மென்றோளே மெங்கையர் தம்போல
நல்லவருட்டமி லேம்.

பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

(இ-ள்) பலபொழுதும் வந்து பயின்று சொல்லற்க, பாணனே, கேட்பாயாக! நெற்செறிந்த வள்வயலூரன் எம்மைப் புணர்ந்த முன்னாளின்கண்ணு மெல்வளைய மென்றோளேம் எங்கையர் தம்மைப்போல நல்லமடந்தையருள் ஐயனு லெண்ணப்பட்டிலேம், எ-று. (எ)

38. நல்வய லூர னலமுரைத்து நீபாண
சொல்லிப் பயின்றுரைக்க வேண்டா வொழிதிநீ
மெல்லுநன் முல்லைஇ சேர்ந்த விருங்கூந்தல்
சொல்லுமவர் வண்ணஞ் சோர்வு.

இதுவுமது.

(இ-ள்) நல்வயலூரனுடைய நன்மை யெல்லாம் யாங்களுளவறிந்து உரைக்க வல்லேம்; பாணனே! நீ சொல்லாற் பயின்றுரைக்க வேண்டா, இனி யொழிவாயாக; நிறமிக்க நன்முல்லைமாலை சேர்ந்த விருங்கூந்தலையுடைய பார்ஹதயே சொல்லாநின்றாள் தன்மாட்டவர் காதலித்த வண்ணத்தையு மெம்மாட்டுள்ள வவரதிகழ்ச்சியையும், எ-று. (அ)

39. 'கருங்கயத் தாங்கட் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்
'விரும்புநாட் போலான் வியநல முண்டான்
கரும்பின்கோ தாயினேம் யாம்.

**வாயில்வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது.**

(இ-ள்) பெருங்கயத்தி விடத்தின்கட் செறிந்த நீலங்களையும் பெரும்புறத் தினையுடைய வாளைப்பெடைகள் கதுவுகின்ற ஊரனெம்மை விரும்பின நாட்போலான், எம்முடைய வியநலத்தை முன்னே யுண்டான்; ஆதலானிப் பொழுது கரும்பின் கோதுபோல வாயினேம், எ-று. (௯)

40. ஆம்ப லணித்தழையு மாரமுந் துயல்வருந்
தீம்புன லூரன் மகளிவ ளாய்ந்தநறுந்
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ. *

**இந்நிலத்தின்கண் இன்னபெற்றியால் வருவாயாகவெனச் சொல்லியது**

(இ-ள்) ஆம்பலாற் செய்யப்பட்ட வணித்தழையு மாரமு மல்குலின்கண்ணு முலையின் கண்ணுமசைந்து வருகின்ற தீம்புனலூரன் மகளிவள், இவ்வூரின் கணுயர்ந்த நறுமலர் நீலம்; பெண்பால்கட்குச் சூடும் மருமாலை செறிந்த மலர்த்தாமரை மாலையைச்சூடி வருவாயாக, எ-று. (௰)

## நெய்தல்.

41. நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கான லுட் கண்டநாட் போலானூர்
செய்த குறியும்பொய் யாயின வரியிழையா
யையகோ லான்றார் தொடர்பு ‡

---

* இதனை நச்சினார்க்கினியர் இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வரும்போது இன்னபெற்றியான் வருவாயாக வென்பதற்கு உதாரணம் காட்டினர். (தொல்-கள. சூ-114.)

‡ அருமை செய்து அயர்ப்பினும் என்பதற்கு உதாரணம் காட்டினர் நச்சினார்க்கினியர் (தொல்-கள. சூ-114 )

அல்லதுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(இ-ள்) நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன் றாழைசூழ்ந்த கானலின்கண் நம்மைக்கண்ட முதனாள் போலானூர்; அவராற் செய்யப்பட்ட குறிகளும் பிழைத்தன. ஆயிழையாய்! ஐ நட்புச் செறிந்தன் றாகாதே யிருப்பது! எ-று. (க)

42. முத்த மரும்பு முடத்தாண் முதுபுன்னை
தத்துதிரை தயங்கு தண்கடற் சேர்ப்ப
சித்திரப் பூங்கொடி யன்னாட் கருளாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு. †

தோழி வரைவு கடாயது.

(இ-ள்) முத்தம்போல வரும்பா நின்ற முடத்தாண் முதுபுன்னையின்கண் வந்து தத்தா நின்ற திரைகள் துளங்காநின்ற தண்ணங்கடற் சேர்ப்பனே; எழுதிய சித்திரப்பூங்கொடி யன்னாட்கு நின்னருளினாலே நல்காய், வித்தகப் பைம்பூணையுடைய நின்மார்பினை, எ-று. (உ)

43. எறிசுறா நீள்கட லோத முலாவ
நெறியிறாக் கொட்கு நிமிர்கழிச் சேர்ப்ப
னறிவறா வின்சொ லணியிழையாய் நின்னிற்
செறிவறாச் செய்த குறி. ‡

அல்லதுறிப்பட்டுப் பெயர்ந்ததோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(இ-ள்) எறி சுறாவையுடைய நீள்கடலின்கண்ணுள்ள வோதம் வந்துலாவ வரிவரியா யிருக்கும் மேனியையுடைய விறால்கள் சுழன்று திருதருஞ் சேர்ப்ப னின்னறிவி னீங்கா திருந்த வின்சொல் அணியிழையை யுடையாய்! நின்மனையின் புறத்துச் சேர்ப்பன் செய்த குறிகள் பலகாலு முளவாக நின்றன, எ-று. (ங)

---

† 'வேண்டாப்பிரிவினும்' என்பதற்கு உதாரணம் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல், கள-சூ 114)

‡ இதனை இத்துறைக்கே உதாரணங் காட்டுவர் நச், (தொல்-கள சூ-133)

44. இனமீ னிருங்கழி யோத முலாவு
மணிநீர் பறக்குந் துறைவ தகுமோ
குணநீர்மை குன்றாக் கொடியன்னாள் பக்க
நினைநீர்மை யில்லா வொழிவு *

தலைமகனைக் கண்ணுற்றுநின்ற தோழி வரைவு கடாயது.

(இ-ள்) இனமீன்களையுடைய விருங்கழியின்கண்ணே வந்து ஓதங்களுலாவ நீலமணிபோன்ற நீர் பறக்குந் துறைவனே! தகுவதன்றோ குணத்தன்மை குன்றாக் கொடியன்னாளை மறந்து நினையு நீர்மையன்றி யொழிதல் நினக்கு? எ-று. (சு)

45. கடல்கொழித் திட்ட கதிர்மணி முத்தம்
படமணி யல்குற் பரதர் மகளிர்
தொடையல்சேர்த் தாடுந் துறைவவென் றோழி
யுடலு முறுநோ யுரைத்து.

இதுவுமது.

(இ-ள்) கடல் கொழித்துச் சிந்திய கதிர்மணி முத்தத்தைப் படம்போன்ற அழகிய வல்குற்பரதர்மகளிர் மாலையாகச் சேர்த்து விளையாடும் துறைவனே; என்றோழி மருகாநிற்கும் தன்னுறு நோயை யெனக்குரைத்து, எ-று. (ரு)

46. முருகியற் கான லகன்கரை யாங்கட்
குருகின மார்க்குங் கொடுங்கழிச் சேர்ப்ப
மருவி வாலுற வேண்டுமென் றோழி
யுருவழி யுண்ணோய் கெட.

இதுவுமது.

(இ-ள்) நறுவிரை யுளதாகிய கானலையுடைய வகன்ற கரையின்கட் குருகினம் ஆராநின்ற கொடுங்கழிச் சேர்ப்பனே! பயின்று வருதலைச் செய்யுமென்றோழி; மாமை நிறமழியாநின்ற வுள்ளத்தின்கண் நோயொழிய, எ-று. (சா)

---

* 'காதல் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கியதில் அருளவேண்டும்' என்பதற்கு உதாரணங் காட்டினர் நச்சினார்க்கினியர் (தொல்-களவு. சூ-114.)

47. அணிபூங் கழிக்கான லற்றைநாட் போலான்
மணியெழின் மேனி மலர்பசப் பூரத்
துனிகடற் சேர்ப்பன் றுறந்தான்கொ றோழி
துணியுமென் மென்றோள் வளை.

**தலைமகன் சிறைப்புறத்தனாகத் தோழியாற் சொல்லெழுப்பப்பட்டுத் தலைமகள் சொல்லியது.**

(இ-ள்) அணிந்த பூக்களையுடைய கழிக்கானலின்கட் கண்ட வற்றைநாட் போலான்; மணியெழின் மேனியின்கண் மிக்க பசப்பேற துனிகடற் சேர்ப்பனெம்மை மிகவே துறந்தான் கொல்லோ; என் மென்றோள் வளைக ணீங்காநின்றன, எ-று. (எ)

48. கறங்குமணி நெடுந்தேர் கண்வா ளறுப்பப்
பிறங்கு மணன்மே லலவன் பரப்ப
வெறங்கூர் கடுங்கதிர் வல்விரைந்து நீங்க
நிறங்கூர் மாலை வரும்.

**தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது.**

(இ-ள்) ஒலிக்கு மணியையுடைய நெடுந்தேர் கண்டார் கண்ணினொளியை யறுப்ப, வுயர்ந்த மணன்மேலலவன் பரப்ப, வெம்மை மிக்க கடிய வெயில் கடிதாக நீங்கச், செக்கர் நிறமாக நிறமிக்க மாலைப் பொழுதின்கண் நங்காதலன் வரும், எ-று (அ)

49. மயிலோகொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர் குயில்பயிலுங்
கன்னி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு ‡

**தலைமகன் பாங்கற்குச் சொல்லியது.**

(இ-ள்) மயிலோ மடவாளோ மாநீர்த்திரையின் கடல் பயின்றுறைவதோர் தெய்வங்கொல்? கேளீரே! குயில்கள் கூவாநின்ற கன்னி யிள ஞாழற் பூம்பொழிலின்கண் அவளைநோக்கிய வென்கண்ணினுமிக வருந்தாநின்றதென்னெஞ்சு, எ-று. (கூ)

---

‡ இதனை இத்துறைக்குதாரணங்காட்டுவர் ந-ர். (தொல்-கள-சூ-103)

50. பவளமு முத்தும் பளிங்கும் விரைஇப்
புகழக் கொணர்ந்து புறவடுக்கு முன்றிற்
றவழ்திரைச் சேர்ப்பன் வருவான்கொ றோழி
திகழுந் திருவமர் மார்பு.

**பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய்த் தோழி வரைவு கடாயது.**

(இ-ள்) பவளத்தினையும், முத்தினையும் பளிங்கினையும் கலந்து பிறர் புகழக் கொணர்ந்து மனை சூழ்ந்த படைப்பையை யணைந்த முற்றத்தின்கண் வந்து வழங்குகின்ற திரையையுடைய சேர்ப்பன் விரைந்து வருவான் கொல்லோ தோழி; முன்புபோற் பொலிவழிந்திரா நினதழகமைந்தமார்பு பொலிவுடையதாய் யிருந்ததாதலான் எம்பெருமான் விரைந்து வருமென்று முற்கொண்டு உமக்கு அறிவிக்கின்றதுபோலும் எ-று, (௰)

| | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 21 | விரை | விரைஇ |
| 4 | 11 | கல் | கல்ல |
| 8 | 23 | முரசினிடித்துரற்றி | முரசினிடித்தாற்றி |
| 13 | 1 | நல் | னல் |
| | 22 | செல்லுமவர்வண்ணஞ் | கசல்லுமவர்வண்ணஞ் |
| 15 | 8 | தத்துதிரைதயங்கு | தத்துதிரைதயங்கு |

Victoria Press—Tiruvalur.